108 நாமங்களில் சம்பூர்ண ராமாயணம்

# நாம ராமாயணம்




**ஸ்ரீ ராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே**
**ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம வராநநே**

தினமும் குறைந்தது மூன்று முறையாவது சொல்லுங்கள்
ராமரின் அனுக்ரஹத்தைப் பெறுங்கள்

## நாரதமகரிஷி எழுதியதும் பாடியதும்

# 108 நாமங்களில் முழுமையான ராமாயணம் - நாம ராமாயணம்

எத்தனை முறை கேட்டாலும் மதுரமானது. எவ்வளவு அதிகமாக தியானிக்கிறோமோ அவ்வளவு நன்மைகளைத் தருவது ராம நாமம். ஸ்ரீ ராம் என்ற நாமத்தை தியானித்து ஆஞ்சனேயர் சிரஞ்சீவியாக நிலைத்திருக்கிறார். பக்தி சிரத்தையுடன் ராமநாம பாராயணம் கொடுக்கும் பலனை வார்த்தைகளால் சொல்ல இயலாது. ராம என்று முடிகிற இந்த நாமராமாயணத்தில் 108 நாமங்களில் மொத்த ராமாயணமும் அடங்கி இருக்கிறது. தினமும் குறைந்த நேரத்தில் நிறைவடையும் இந்த பாராயணத்தால், ராமாயணம் முழுவதும் படித்த புண்ணியம் கிடைக்கிறது முடியாவிட்டால் குறைந்தது புனர்பூச நட்சத்திரம், நவமி, ஏகாதசி நாட்களிலாவது இதனைப் படிப்பது நல்ல பலன்களைத் தரும் என்று பெரியவர்கள் சொல்லி இருக்கிறார்கள். ஸ்ரீ ராமபிரானின் அனுக்கிரஹம் எல்லோருக்கும் கிடைக்க வேண்டும் என்பதே எங்களின் இந்த சிறிய முயற்சி







### பாலகாண்டம்

1. சுத்த ப்ரஹ்மபராத்பர ராம
2. காலாத்மக பரமேஸ்வர ராம
3. ஸேஷதல்ப ஸுக நித்ரித ராம
4. ப்ரஹ்மா த்யமர ப்ரார்த்தித ராம
5. சண்ட கிரண குல மண்டந ராம
6. ஸ்ரீமத் தசரத நந்தந ராம
7. கௌசல்யா ஸுக வர்த்த ராம
8. விஸ்வாமித்ர ப்ரியதன ராம
9. கோரதாடகா காதக ராம
10. மாரிசாதி நிபாதக ராம
11. கௌஸிக மகஸம் ரக்ஷக ராம
12. ஸ்ரீமத ஹல்யோத் தாரக ராம
13. கௌதமமுநிஸம் பூஜித ராம
14. ஸுரமுநி வரகண ஸம்ஸ்துத ராம
15. நாவிக தாவித ம்ருதுபத ராம
16. மிதலாபுரஜந மோஹக ராம
17. விதேஹ மாநஸ ரஞ்ஜக ராம
18. த்ர்யம்பக கார்முக பஞ்ஜக ராம
19. ஸிதார்ப்பித வரமாலிக ராம
20. க்ருதவை வாஹிக கௌதுக ராம
21. பார்க்கவதர்ப்ப விநாஸக ராம
22. ஸ்ரீ மதயோத்யா பாலக ராம

### அயோத்யா காண்டம்

23. அகணித குணகண பூஷித ராம
24. அவநீத நயா காமித ராம
25. ராகாசந்த்ர ஸமாநந ராம
26. பித்ரு வாக்யாச்ரித கானன ராம
27. ப்ரிய குஹ விநிவேதித பத ராம
28. தத் க்ஷாலித நிஜ ம்ருதுபத ராம
29. பரத்வாஜ முகா நந்தக ராம
30. சித்ர கூடாத்ரி நிகேதந ராம
31. தசரத ஸந்தத சிந்தித ராம
32. கைகேயீ தநயார்த்தித ராம
33. விரஸித நிஜபித் ருகர்மக ராம
34. பரதார்ப்பித நிஜபாதுக ராம

### ஆரண்ய காண்டம்

35. தண்ட காவ நஜந பாவந ராம
36. துஷ்ட விராத விநாஸந ராம
37. ஸரபங்க ஸுதீஷ்ண அர்ச்சித ராம
38. அகஸ்த்யா நுக்ரஹ வார்த்தித ராம
39. க்ருத்ராதிப ஸம்ஸேவித ராம
40. பஞ்சவடீ தடஸுஸ்தித ராம
41. ஸீர்ப்பண கார்த்தி விதாயக ராம
42. கரதூஷணமுக ஸூதக ராம
43. ஸீதாப்ரிய ஹிர்ணநுக ராம
44. மாரீசார்த்தி க்ருதாஸுக ராம
45. விநஷ்டஸீ தாந்வேஷக ராம
46. க்ருத்ராதிப கதி தாயக ராம
47. ஸபரிதத்த பலாஸந ராம
48. கபந்த பாஹுச் சேதந ராம

### கிஷ்கிந்தா காண்டம்

49. ஹநமத் ஸேவித நிஜபத ராம
50. நதஸுக் ரீவா பீஷ்டத ராம
51. கர்வித வாலி ஸம்ஹாரக ராம
52. வாநர தூத ப்ரேஷக ராம
53. ஹிதகர லக்ஷ்மண ஸம்யுத ராம













## சுந்தரகாண்டம்

54. கபிவர ஸந்தத ஸம்ஸ்ம்ருத ராம
55. தக்கதிவிக்ந த்வம்ஸக ராம
56. ஸீதாப்ராணாதாரக ராம
57. துஷ்ட தஸாந தூஷித ராம
58. ஸிஷ்ட ஹநுமத் பூஷித ராம
59. ஸீதோதித ககாவந ராம
60. க்ருதசூடாமணி தர்ஸந ராம
61. கபிவர வசநா ஸ்வாஸித ராம

## யுத்தகாண்டம்

62. ராவண நிதந ப்ரஸ்தித ராம
63. வாநர ஸைந்ய ஸமாவ் ருத ராம
64. ஸோஷித ஸர்தீஸார்த்தித ராம
65. விபீஷணபய தாயக ராம
66. பர்வத ஸேது நிபந்தக ராம
67. கும்பகர்ண ஸரஸ்சேதக ராம
68. ராஷஸ ஸங்க விமர்தக ராம
69. அஹிமஹிராவண சாரண ராம
70. ஸம்ஹ்ருத தஸமுக ராவண ராம
71. விதிபவமுகஸுர ஸம்ஸ்துத ராம
72. கஸ்தித தஸரத வீக்ஷித ராம
73. ஸீதா தர்ஸன மோதித ராம
74. அபிஷிக்த வீபீஷண நத ராம
75. புஷ்பக யாநாரோஹண ராம
76. பரத்வாஜாபி நிஷேவண ராம
77. பரதப்ராண ப்ரியகர ராம
78. ஸாகேதபுரீ பூஷண ராம
79. ஸகலஸ்வீய ஸமாநத ராம
80. ரத்நலஸத் பீடாஸ்தித ராம
81. பட்டாபிஷே காலங்க்ருத ராம
82. பார்திவ குல ஸம்மாநித ராம
83. விபீஷணார்ப்பித ரங்கக ராம
84. கிஸகுலா நுக்ரஹகர ராம
85. ஸகல ஜீவ ஸம்ரக்ஷக ராம
86. ஸமஸ்த லோகாதாரக ராம

## உத்தர காண்டம்

87. ஆகத முநிகண ஸம்ஸ்துத ராம
88. விஸ்ருத தஸகண் டோத்பவ ராம
89. ஸீதாலிங்கந நிர்வ்ருத ராம
90. நீதிஸுரக்ஷித ஜநபத ராம
91. விபிந த்யாஜித ஜநகஜ ராம
92. காரித லவணஸுரவத ராம
93. ஸ்வர்க்கத ஸம்புக ஸம்ஸ் துத ராம
94. ஸ்வதநய குஸலவ நந்தித ராம
95. அஸ்வமேத க்ரது தீக்ஷித ராம
96. காலாவே தித ஸுரபத ராம
97. ஆயோத்யகஜந முக்தித ராம
98. விதிமுக விபதா நந்தக ராம
99. தேஜோமய நிஜரூபக ராம
100. ஸம்ஸ்ருதி பந்த விமோசக ராம
101. தர்மஸ்தாபந தத்பர ராம
102. பக்தி பராயண முக்தித ராம
103. ஸர்வ சராசர பாலக ராம
104. ஸர்வ பவாமய வாரக ராம
105. வைகுண்டாலய ஸம்ஸ்தித ராம
106. நித்யா நந்த பதஸ்தித ராம
107. ராமராமஜய ராஜா ராம
108. ராமராமஜய ஸீதா ராம







## மங்களம்

பயஹர மங்கள தஸரத ராம – ஜயஜய மங்கள ஸீதா ராம
மங்களகர ஜய மங்கள ராம – ஸங்கதஸுப விபவோதாய ராம
ஆநந்தாம்ருத வர்ஷக ராம – ஆஸ்ரித வத்ஸல ஜயஜய ராம
ரகுபதி ராகவ ராஜா ராம – பதித பாவன ஸீதா ராம



# ஸ்ரீ நடராஜர்



## சிவபெருமானுடைய ஆறு தாண்டவங்கள்

``குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமின் சிளிப்பும் பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும் இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும் காணப் பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே`` – திருநாவுக்கரசர்

1. ஆனந்த தாண்டவம் 2. சந்தியா தாண்டவம் 3. உமா தாண்டவம் 4. கௌரி தாண்டவம் 5. காளிகா தாண்டவம் 6. திரிபுரா தாண்டவம்

## நடராஜ தத்துவம்

**திருமுகம்** : எல்லையற்ற அழகும் இனிய தன்ஒளித்திறனும் கொண்டு தலைமைப்பாட்டினைக் குறிக்கும்.

**பனித்தசடை** : சடை சிவநெறிக்குரிய தவ ஒழுக்கச் சிறப்பையும் காட்டுகின்றது.

**கங்கை** : இறைவன் பேராற்றலையும் வேகங்கெடுத்தாளும் வித்தகத்தையும் விளக்குவது.

**பிறைசூடுதல்** : சரண் என அடைந்தவரைத் தாங்கித் தாழ்வு நீக்கிப் பாதுகாக்கும் வள்ளல்தன்மை.

**குனித்த புருவம்** : பரதக் கலையின் மெய்ப்பாடு உணர்த்துவது. தன்பாற்போந்து குறையிரந்து முறையிடும் அடியார்களின் விண்ணப்பங்களைக் கூர்ந்து நோக்கி ஊன்றிக் கேட்டருளும் கருணைத் திறத்தினைக் காட்டுவது.

**குமின் சிளிப்பும்** : அடைக்கலம் புகுந்தோரை, என்று வந்தாய் என்று அருளோடு வரவேற்று, பிழைபொறுத்து வாழ்வளித்து மகிழ்விக்கும் மாட்சியைக் குறிப்பது.

**பவளமேனி** : இறைவன் நீ வண்ணத்தான் நெருப்பை யொத்தவன். நெருப்புத் தன்பால் எய்தும் பொருள்களை எல்லாம் தூய்மையாக்கிப் புனிதம் அடையச் செய்வது போல, இறைவனும் தன் அடியார்களின் மாசுக்களை நீக்கி – மலநீக்கி மாண்புரச் செய்யும் அருட்டிறத்தைக் குறிப்பது.

**பால்வெண்ணீறு** : எப்பொருளும் இறுதியில் எய்தும் நிலை சாம்பல்தானே! நீறு மற்றொன்றாக மாறி அழியாது. ஆகவே பால்வெண்ணீறு தூய இயல்பினையும் அழியாத் தன்மையையும் குறிக்கின்றது. தொழுதெழுவார் வினைவளம் நீறெழ இறைவன் நீறு அணிகின்றார். மேலும் செந்நிற மேனியில் வெண்ணீறு அணிந்த கோலம் எவர் அணிந்த கோலம் எவர் நெஞ்சையும் கவர்ந்து பிணிக்கும் பான்மையுடையது.

**நெற்றிக்கண்** : மேல் நோக்கிய நிலையில் நிமிர்ந்து நிற்கும் நெற்றிக்கண் சிவபிரானின் தனிப்பெரும் முதன்மையை உணர்த்துவது. இது சிவபெருமானுக்குரிய சிறப்பு அடையாளம்.

**நீலகண்டம்** : ஒருவரும் உண்ணாத நஞ்சு உண்டும் இருந்தருள் செய்யும் இறைவனின் நயத்தக்க நாகரிக நலனையும் பரமன் தோற்றுவிக்கும் பான்மையை இது காட்டுகிறது.

**நெருப்பு** : இறைவன் இடக்கரத்தில் ஏந்தியுங்ளள நெருப்பு. உயிர்களின் பிறவித் தளைகளின் இளைப்பினை நீக்கும் பொருட்டுச் செய்யும் சம்ஹாரத் தொழிலைக் காட்டுவது.

**அபயகரம்** : அமைந்தகை காத்தல் தொழிலைக் குறிப்பது. அடியார்களுக்கு ஆறுதல் கூறித் தேற்றும் நிலை இது.

**வீசியகரம்** : யானையின் துதிக்கையைப் போன்று திகழும் இவ்விடக்கை கஜஹஸ்தம் எனப்படும். இக்கையின் விரல், தூக்கிய திருவடியைக் காட்டுகின்றது. திருவடியை நம்பித் தொழுக. இது உம்மை ஈடேற்றும் என்பது குறிப்பு.

**எடுத்த திருவடி** : இறைவனின் வலது திருப்பாதம் இது. முயலகனை மிதித்து அவன் மீது ஊன்றிய நிலை மலத்தை முழுதாக அழித்து விடாமலும், மலத்தால் உயிர்கள் பெரிதும் வருந்தாமலும், வினைப் பயன்களை உயிர்கள் நுகர இறைவன் இயற்றும் மறைத்தல் தொழிலைக் குறிப்பது.

**முயலகன்** : இது ஆணவ மலத்தைக் குறிப்பது. முத்தி நிலையில் உயிர்கள் மாட்டு ஆணவமலம் அடங்கிக் கிடப்பதைப் போன்று முயலுகனும் இறைவன் திருவடியின் கீழ், மாயாதே தன் சத்தி மாய்த்து கிடக்கின்றான்.

**தெற்கு நோக்குதல் :** ஆடவல்லான் தெற்கு நோக்கியே ஆடுகின்றார். யமபயத்தை நீக்கியருளி நம்மை உய்விப்பதற்காக தென்றற்காற்றின் மீதும் தென் தமிழின் மீதும் உள்ள விருப்பாலும் தெற்கு நோக்கி இறைவன் ஆடுகின்றார் என நயம்படக் கூறுவார். திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர்.

இறைவனின் உடுக்கை – ஆக்கல் (சிருட்டி), அமைத்தகை – காத்தல் (ஸ்திதி), ஏந்திய அனல் – அழித்தல் (சம்ஹாரம்), ஊன்றிய திருவடி – மறைத்தல் (திரோபாவம்), எடுத்த திருவடி – முத்தி (அனுக்கிரகம்) இறைவன் துடி (உடுக்கை)யைக் கொட்டுவதால் ஆன்மாக்களின் மாயையை உதறுகிறான். ஏந்திய நெருப்பால் கன்ம மலத்தினைச் சுடுகிறான். ஊன்றிய திருவடியால் ஆணவ மலத்தை அழுந்தித் தேய்விக்கிறான். தூக்கிய திருவடியால் உயர்களைப் பிறவிக் கடலிலிருந்து எடுக்கிறான். அபயகரத்தால் உயிர்களை இன்பக் கடலில் திளைக்கச் செய்கின்றான். மும்மலங்களையும் நீக்கி ஆன்மாவை ஆனந்தத்தில் ஆழ்த்தும் அம்பலத்தான் கூத்தினை ஆழகாகக் காட்டுகிறது உண்மை விளக்கம்.

''மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடும் – ஆநந்த
மொண்டிருந்த நின்றாடல் காணுமருண் மூர்த்தியாக்
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து'' – உண்மை விளக்கம் 38

இச்சிவ தாண்டவத்தின் சிறப்பு மூவகையில் அமைந்துள்ளது.

1. திருவாசியால் குறிக்கப்படும் இப்பிரபஞ்சத்துள்ளே அனைத்து இயக்கங்களுக்கு அவரது தாண்டவமே மூலமாக அமைந்துள்ளது.
2. மாயைனின் தளையிலிருந்து எண்ணிறந்து உயிர்களை விடுவிப் பதையே அவரது தாண்டவம் நோக்கமாகக் கொண்டுள்ளது.
3. பிரபஞ்சத்தின் மையத்தானமான சிதம்பரம் நமது இதயத்தானமாகும். இதயத்தில் தான் அவரது நடனம் திகழ்கிறது.

''ஆனந்தம் ஆடரங்கு ஆனந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்தம் வாச்சியம்
ஆனந்தமாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே'' – திருமூலர்

''உலகெலாம் உணர்ந்த தோதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்'' – சேக்கிழார்

இங்ஙனம் ஆடல்வல்லான் அருள் வடிவம் உண்மையின் வடிவாக, அன்பின் வடிவாக, கருணையின் வடிவாக, இன்ப வடிவாக, ஆனந்த வடிவாகத் திகழ்கின்றது.

**திருச்சிற்றம்பலம் – சுபம்**

# பிரதோஷவிரதம்

தினமும் சூரியன் மறைவதற்கு முன்புள்ள பகல் வேளையின் எட்டில் ஒரு பகுதியும் சூரியன் மறைந்த பின்புள்ள இரவு வேளையின் எட்டில் ஒரு பகுதியும் சேர்ந்த மூன்று மணி நேரம் பிரதோஷ காலம் எனப்படும். பிரதோஷ விரதம் கடைப்பிடிக்க வேண்டில் திரயோதசி திதி பகல் வேளையின் கடைசி எட்டில் ஒரு பகுதியிம் இரவு வேளையின் முதல் பன்னிரண்டில் ஒரு பகுதியும் சேர்ந்த காலகட்டத்தில் இருந்தாக வேண்டும். சதுர்த்தசி திதி இக்கால கட்டத்தில் ஆரம்பிக்குமானால் பிரதோஷ விரதம் கடைப்பிடிக்க வேண்டியது வளர்பிறை காலத்தில் திரயோதசி திதி தினத்தன்றும் தேய்பிறை காலத்தில் துவாதசி திதி தினத்தன்றும் ஆகும்.

# பிரதோஷத்தின் அர்த்தம்

சமஸ்கிருத வாத்தையான ப்ர வைக் குறிக்கும் பிர அளவுக்கு அதிகமான என்ற கருத்தையுடையது. தோஷம் என்ற வார்த்தை விரும்பத்தகாத விளைவுகளைக்குறிக்கும். பிரதோஷம் என்ற வார்த்தை பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் இணைந்து கடைந்தபொழுது வெளிவந்த ஆலகால விஷத்தால் மனிதவர்க்கம் எதிர்நோக்கிய மாபெரும் அபாயத்தை குறிக்கப் (புராணங்களில்) பயன்படுத்தப் படுகிறது.

தேவர்களும் அசுரர்களும் தீர்க்காயுளைத்தரும் அருமருந்தாம் அமிர்தத்தைப் பெறும் பொருட்டு பாற்கடலைத் கடைவதற்காக ஒன்றிணைந்தனர். தசமி தினத்தன்று (வளர்பிறை தேய்பிறைக் காலங்களில் பத்தாவது தினங்களில் வருவது) அவர்கள் மந்தாரமலையை மத்தாகவும் வாசுகி என்ற சர்ப்பத்தைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைய ஆரம்பித்தனர். சர்ப்பம் மிகக் களைப்படைந்தும் கொடிய விஷமான ஆலகால விஷத்தைக் கக்கி தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் உலகத்து உயிரினங்களுக்கும் மிக்க அபாயத்தை உண்டாக்கியது.

அச்சங்கொண்ட தேவர்களும் அசுரர்களும் தங்களைக் காத்தருளும் படி பரமபொருளாம் சிவனை ஒன்றுசேர வணங்கலாயினர். கருணைவடிவான சிவன் தனது பக்தர்களை பேராபத்தினின்றும் காத்தருளத் திருவுளங் கொண்டு ஆலகால விஷத்தை விழுங்கி அருளினார். (அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை எண்ணயி சக்தி சிவனின் தொண்டையை இறுகப் பிடித்தாரென்றும் அதனால் விஷம் தொண்டையில் தங்கி விட்டதாகவும் கூறப்படுகிறது. அதனால் சிவனுக்கு நீலகண்டன் என்ற பெயர்). அடுத்த நாள், அதாவது ஏகாதசி தினத்தன்று, திரும்பவும் பாற்கடலைக் கடைய ஆரம்பித்து தொடர்ந்து துவாதசி நாளன்றும் கடைந்து கொண்டே இருக்கையில் அவர்களுக்கு அமிர்தம் கிடைத்தது.

அமிர்தம் கிடைத்ததும் தேவர்கள் பரம்பொருளாம் சிவனை வணங்க மறந்து தங்களுக்குள்ளே களிப்புற்று மகிழ ஆரம்பித்தனர். பின்னர் தங்களின் முட்டாள்தனமான செய்கையை உணர்ந்து திரயோதசி தினத்தன்று பரம்பொருளாம் சிவனை வணங்கி தங்களது பிழையான செய்கைகளைப் பொறுத்து அருளுமாறு வேண்டிக்கொள்ள கைலை மலை சென்றனர். பரம்பொருளாம் சிவன் அவர்களைப் பொறுத்து அருளியதுடன் அவர்களுக்காக நந்தியின் இரு கொம்புகளுக்கிடையே நடனம் புரிந்து அவர்களைப் பேரானந்தமும் அடையச் செய்தருளினார். இக்காட்சியை விஷ்ணு மற்றும் பிரம்மா உட்பட எல்லா தேவர்களும் தெய்வங்களும் கண்டு கொண்டனர். இவை அனைத்து நடந்தது திரயோதசி தினத்து பிரதோஷ காலம் எனப்படுகிறது.

சிவனை தெய்வங்களில் ஒன்றாகக் கொண்டிருக்கும் ஆலயங்களில் மாதமிரு முறை பிரதோஷ விரத நாட்களில் பிரதோஷப் பிரார்த்தனைகள் இடம் பெறுகின்றன. இத்தினங்களில் பிரதோஷ கால கட்டத்தில் நந்திக்கும் சிவனுக்கும் அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. பிரதோஷகாலப் பிரார்தத்னைகள் வழிபாடு செய்வோரின் பாவங்கள் அகற்றும் என நம்பப்படுகிறது. பிரதோஷகாலப் பிரார்தத்னைகளின் போது மற்ற தெய்வங்கள் யாவும் சிவனுடன் இருப்பதால் அக்காலகட்டத்தில் சிவனை வணங்குவதால் மற்றைய தெய்வங்கள் அனைவரின் அருளையும் பெறலாம்.

# அருள்மிகு விசாலாக்ஷி அம்பாள் சமேத அருள்மிகு விஸ்வநாதீஸ்வரர் ஆலயம்

கல்பூண்டி கிராமம், ஆரணி தாலுக்கா, திருவண்ணாமலை மாவட்டம்



## பிரதோஷ வழிபாட்டில் ஒவ்வொரு கிழமைக்கும் ஒவ்வொரு பலன் உண்டு

| | | |
|---|---|---|
| ஞாயிறு | – | சுப மங்களத்தை தரும் |
| திங்கள் | – | நல்ல சிந்தனைகள் வரும், அனேக அசுவமேத யாகங்கள் செய்த பலன் கிட்டும் |
| செவ்வாய் | – | பஞ்சம், பட்டினி, வறுமை விலகும் |
| புதன் | – | புத்திரப்பேறு கிட்டும். கல்வி கேள்விகளில் திறமை வலுப்பெறும். |
| வியாழன் | – | குருவருளோடு இறை அருள் கிடைக்க பித்ருக்கள் உதவுவர். எவ்வித ஆபத்தும் விலகிப் போகும். |
| வெள்ளி | – | எதிர்ப்புகள் நீங்கும். எதிரிகள் அழிவார்கள் |
| சனி | – | மகா பிரதோஷ நாள், உதவி உயர்வு வரும் அஷ்டலட்சுமிகளின் பரிபூரண ஆசி கிட்டும். 5 வருடம் தினமும் தவறாமல் ஆலய வழிபாடு செய்த பலன் கிட்டும். |

## பிரதோஷ காலத்தில் செய்யப்படும் அபிஷேகப் பொருட்களும் அதன் பலன்களும்

| | | |
|---|---|---|
| தண்ணீர் | – | மனத்தூய்மை |
| மஞ்சள் | – | வசீகரம், மங்களம், நல்ல நட்பு தரும். |
| பச்சரிசி மாவுப்பொடி | – | கடன் தீரும், குபேர சம்பத்து கிடைக்கும் |
| பால் | – | ஆயுள் விருத்தி |
| தயிர் | – | குழந்தை பாக்கியம். உடல் வலு |
| பஞ்சாமிர்தம் | – | நீண்ட ஆயுள், உடல்பலம். வெற்றி |
| நெய் | – | முக்தி, சுகவாழ்வு |
| தேன் | – | குரலினிமை |
| நல்லெண்ணெய் | – | பக்தி, சுகம், நலம் தரும் |
| சர்க்கரை | – | பகை, எதிரிகள் ஒழிவர் |
| எலுமிச்சை | – | மரண பயம் நீங்கும் |
| இளநீர் | – | ராஜயோகம், நன்மக்கட்பேறு |
| கற்கண்டு | – | ஒற்றுமை |
| விபூதி | – | சகல ஞானமும் கை கூடும் |
| குங்குமம் | – | மங்களம் தரும் |
| மலர்கள் | – | தெய்வ தரிசனம் கிட்டும் |
| பன்னீர் | – | சரும நோய்கள் அகலும் |

## பிரதோஷ நன்மைகள்

- தொடர்ந்து 3 பிரதோஷங்கள் பார்த்தால் பிரம்மா, விஷ்ணு சிவன் மூவரையும் ஒன்று சேர பார்ப்பதாகும்.
- தொடர்ந்து 5 பிரதோஷங்கள் பார்த்தால் உடலில் உள்ள அனைத்து நோயும் நீங்கும்.
- தொடர்ந்து 7 பிரதோஷங்கள் பார்த்தால் பெண்களுக்கு திருமணம் கைக்கூடும்.
- தொடர்ந்து 11 பிரதோஷங்க்ள் பார்த்தால் உடலும் மனமும் வலிமை பெறும்.
- தொடர்ந்து 13 பிரதோஷங்க்ள் பார்த்தால் நினைத்த காரியம் நடக்கும்
- தொடர்ந்து 21 பிரதோஷங்க்ள் பார்த்தால் புத்திர பாக்கியம் கிட்டும்
- தொடர்ந்து 33 பிரதோஷங்க்ள் பார்த்தால் சிவன் கோவில் கும்பாபிஷேகம் பார்ப்பதற்கு சமம்
- தொடர்ந்து 77 பிரதோஷங்க்ள் பார்த்தால் ஓர் யுதர யாகம் நடத்தியதற்கு சமம்
- தொடர்ந்து 108 பிரதோஷங்க்ள் பார்த்தால் தேவேந்திர பூஜை நடத்தியதற்கு சமம்
- தொடர்ந்து 121 பிரதோஷங்க்ள் பார்த்தால் அடுத்த பிறவி கிடையாது முக்தி அடைவது உறுதி
- தொடர்ந்து 1008 பிரதோஷங்கள் பார்த்தால் அஸ்வமேதயாகம் நடத்தியதற்கு சமம்.

நமக்கு விதிக்கப்பட்ட தர்மங்களை அனுசரியுங்கள்
எப்பொழுதும் உண்மையே பேசுங்கள்.
தினமும் இறைவனை வணங்குங்கள்
முடிந்த வரை பிறருக்கு உதவுங்கள்
எந்த நிலையிலும் பிறருக்கு இன்னல்கள் செய்யாதீர்கள்
எப்பொழுதும் அன்புடன் இருங்கள்
தாய் தந்தையர்களை கௌரவியுங்கள்

ஸ்ரீ குருப்யோ நம:



| | | |
|---|---|---|
| குரு | குருர் ப்ரஹ்மா குருர்விஷ்னுர் குருர் தேவா மஹேச்வர: \| | ச |
| வ | குரு: ஸாக்ஷாத் பரம்பிரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: \|\| | ம |
| ந் | குரவே ஸர்வ லோகனாம் பிஷஜே பவரோகினாம் \| | ர் |
| த | நிதயே ஸர்வ வித்யானாம் தக்ஷிணாமூர்த்தயே நம: \|\| | ப |
| ன | ச்ருதி ஸ்ம்ருதி புராணானாம் ஆலயம் கருணாலயம் \| | ண |
| ம் | நமாமி பகவத் பாதசங்கரம் லோக சங்கரம் \|\| | ம் |


Published By : **KALPOONDI WELFARE TRUST** (Reg.No. 409/2009)
CT-2, Salmas Royal Residency, 48/1, Arcot Road, Saligramam, Chennai - 600 093.
Ph : 9543715552, E-mail : krg858@gmail.com
Visit us at : www.kalpoonditemple.com